# லகு - வாக்ய வ்ருத்தி

[வேறொரு நூலைச் சுருக்கி, எளிதாக்கித் தரும் போது மூல நூலின் பெயரோடு "லகு" என்ற அடைமொழி சேர்க்கப்படும். ஆசார்யாள் அனுக்ரஹித்திருக்கிற "வாக்ய வ்ருத்தி" என்ற பிரகரணத்தின் அப்படிப்பட்ட ஸங்கிரஹமே இப் பிரகரணம் எனலாம். "தத்-த்வம்-அஸி" வாக்கியத்தை எடுத்துக்கொண்டு அதிலுள்ள பதங்களுடைய தாத்பர்யத்தைத் தெளிவாக "வாக்ய வ்ருத்தி" யில் விளக்கியுள்ள ஆசார்யாள் ஆத்மாவிற்கும் பிரஹ்மத்திற்கும் உள்ள ஐக்கியத்தை எப்படி அநுபவத்துக்கு வருமாறு அப்யாஸம் செய்வது என்பதை மாத்திரம் இதில் சுருக்கமாகக் கண்டிருக்கிறார்.]

**ஸ்தூ2லோ மாம்ஸமயோ தே3ஹ: ஸூக்ஷ்ம: ஸ்யாத்3-வாஸநாமய: |**
**ஞாந கர்மேந்த்3ரியை: ஸார்த4ம் தீ4 - ப்ராணௌ தச் - சரீரகெ3ள ||** 1

மாம்ஸ மயமாயிருக்கிறது தான் ஸ்தூலமான சரீரம்; (பூர்வ கர்மாவினால் ஏற்பட்ட) வாஸனாமயமாயிருக்கிறதுதான் ஸூக்ஷ்ம சரீரம் ஆகும். ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்கள் இவைகளுடன் சேர்ந்து அந்தக்கரணமும், பிராணனும் அந்த ஸூக்ஷ்ம சரீரத்தில் இருப்பவைகள்.

**அஜ்ஞாநம் காரணம் ஸாக்ஷி போ3த4ஸ் - தேக்ஷாம் விபா4ஸக: |**
**போ3தா4பா4ஸோ பு3த்3தி4க3த: கர்தா ஸ்யாத் புண்யபாபயோ: ||** 2

காரண சரீரம் என்பது அஜ்ஞானமேயாகும். இந்த மூன்றுவித சரீரங்களையும் பிரகாசப்படுத்துகிற அறிவு ஸாக்ஷியெனப்படும். புத்தியில் ஏற்பட்ட அந்த அறிவின் ஆபாஸம் (பிரதிபிம்பம்) தான் புண்ணியத்தையும் - பாபத்தையும் செய்கிறவனாக ஆவது.

**ஸ ஏவ ஸம்ஸரேத் கர்மவசாத் லோகத்3வயே ஸதா3 |**
**போ3தா4பா4ஸாத் சுத்3த4 போ3த4ம் விவிச்யா - த்3தியத்நத: ||** 3

அவன் தான் (அதாவது ஏக அறிவின் பிரதிபிம்பமான சிதாபாஸன் தான்) கர்மாவிற்கு வசப்பட்டு எப்பொழுதும் இஹலோகம் - பரலோகம் இரண்டிலும் சுழலுகிறான். ஆகையால் அறிவின் ஆபாஸமான ஜீவனிடமிருந்து சுத்தமான அறிவான ஆத்மாவை விசேஷமாக பிரயத்தினம் செய்து பிரித்து அறியவேண்டும்.

[சுத்தமான அறிவு ஸ்வரூபமான ஆத்மா கேவலம் ஸாக்ஷியேயாகும். புத்தியில் பிரதிபலிக்கும் அறிவின் ஆபாஸமான ஜீவனே ஸம்ஸாரத்தில் சுழலுகிறான். எனவே, ஸம்ஸாரத்திலுள்ள ஸுகதுக்கங்களிலிருந்து விடுபட நினைப்பவன் தன்னை சுத்தமான ஆத்மாவெண்றே உணர வேண்டும்.]

**ஜாக3ர - ஸ்வப்நயோரேவ போ3தா4பா4ஸ - விட3ம்ப3நா ।**
**ஸுப்தௌ து தல்லயே போ3த4: சுத்3தோ4 ஜாட்3யம் ப்ரகாசயேத் ॥** 4

ஜாக்ரத் (விழிப்பு), ஸ்வப்னம் என்ற இரண்டு நிலைகளில் தான் சிதாபாஸனான ஜீவனின் சேஷ்டை. ஸுஷுப்தி (தூக்கம்) யிலோ சிதாபாஸன் ஒடுங்கி யிருக்கும் போது, சுத்தமான அறிவே அக்ஞானத்தைப் (ஜடத்தன்மையைப்) பிரகாசப்படுத்தும்.

தூங்கும் போது நாம் அதன் ஸுகத்தை அறிய முடியாவிடினும், விழித்தபின் "'ஸுகமாய்த் தூங்கினேன்" என்பதால் அப்போதும் ஸுகஸ்வரூபமான ஆத்மா பிரகாசித்ததாகத் தெரிகிறது. "நான் ஸுகமாகத் தூங்கினேன்" என்று சொல்வதுடன் "நான் எதையும் அப்போது அறியவில்லை" என்றும் சொல்கிறோம். "நான் எதையும் அறியவில்லை" என்று சொல்வதனாலேயே" அறியப்படும் விஷயங்கள் எதுவும் என் அறிவிற்கு விஷயமாகவில்லை" என்று மாத்திரம் ஏற்படுமே தவிர "அந்த ஸமயம் எனக்கு அறிவும் இல்லை" என்று ஏற்படாது. ஆகையால் விஷயத்தை எதிர்பாராததாயும், எதையும் அறியாத நிலையான அக்ஞானத்தை மாத்திரம் விளக்குவதாயும் ஓர் அறிவு இருக்கிறதென்பது ஸித்தம்.

**ஜாக3ரே(அ)பி தி4யஸ் - தூஷ்ணீம் - பா4வ: சுத்3தே3 பா4ஸ்யதே ।**
**தீ4 - வ்யாபாராச்ச சித்பா4ஸ்யாச் - சிதா3பா4ஸேந ஸம்யுதா: ॥** 5

ஜாக்ரத் காலத்திலும் கூட புத்தியானது எவ்வித வியாபாரமுமின்றி இருப்பது சுத்த (ஞான) ஸ்வரூபனான ஆத்மாவினால் தான் விளக்கப்படுகிறது. அறிவின் ஆபாஸத்துடன் கூடிய புத்தியின் எல்லா வியாபாரங்களும் கூட சுத்த அறிவி னாலேயே விளக்கப்படுகின்றன.

[காமக் குரோதாதிகளோ, ஸங்கல்ப விகல்பாதிகளோ எவ்வித வியாபாரமுமின்றி ஜாக்ரத் காலத்திலேயே சிலசமயம் புத்தி நின்று விடும். அந்த ஸமயம் "இப்பொழுது என் புத்தி எவ்வித வியாபாரமுமின்றி நிச்சலமாக இருக்கிறது" என்று உணர்வது ஆத்மாவேயாகும். ஏனென்றால் இவ்வறிவிற்கு புத்தி விஷயமாக (Object) ஆகி விட்டது; ஆகவே இவ்வறிவிற்கு புத்தி அறிபவதாகவாவது (Subject) ஸாதனமாகவாவது (Means) இருக்க முடியாது. இவ்விதம் புத்தி நிச்சலமாயிருக்கும் போது சுத்தமான ஆத்மா பிரகாசிக்கிறது என்று சொன்னதால் புத்தி நிச்சலமில்லாமல் வியவஹரிக்கும் போது, சுத்த ஆத்மாவை அறிய முடியாதோவென்ற சந்தேஹம் ஏற்படக்கூடியது. அதற்கிடமின்றி புத்தி சேஷ்டிக்கும் போதும் அவ்வாத்மாவை அறியலா மென்கிறார். புத்தியோ அதன் சேஷ்டைகளோ யாவும் ஜடமே, அவைகளுக்கு தன்னால் பிரகாசிக்கும் தன்மை கிடையாது. அவைகள் பிரகாசிக்க வேண்டுமானால் பிரகாசத்தன்மையுள்ள வேறொன்றுடன் கலந்தேயாக வேண்டும். அவ்விதம் கலப்பது ஆபா ஸ அறிவு. அந்த ஆபாஸ அறிவிற்குப் பிரகாசிக்கும் தன்மையைக் கொடுப்பதும் அந்த சுத்த அறிவேயாகும்.

ஆகையால் புத்தியின் சேஷ்டைகளையோ, சேஷ்டையின்மையையோ இரண்டையும் பிர்காசப்படுத்துவது சுத்தமான ஆத்மாவேதான்.]

**வஹ்நி - தப்த - ஜலம் தாப - யுக்தம் தே³ஹஸ்ய தாபகம் ।**
**சித்³பா⁴ஸ்யா தீ⁴ஸ் - தத்தா³பா⁴ஸ யுக்தா(அ)ந்யம் பா⁴ஸயேத் த³தா ॥** 6

நெருப்பில் சூடு ஏறிய ஜலம் சூடோடு கூடின தாய் தேஹத்திற்கு சூட்டைக் கொடுக்கிறது. அதே மாதிரி, புத்தியானது சுத்த அறிவினால் பிரகாசிக்கப்பட்டு அவ்வறிவின் ஆபாஸத்துடன் (பிரதிபலிப்புடன்) கூடியதாக இருந்துகொண்டு வேறு பதார்த்தத்தங்களைப் பிரகாசப்படுத்தும்.

**ரூபாதெ³ள கு³ணதோ³ஷாதி³ - விகல்பா பு³த்³தி⁴கா³: க்ரியா: ।**
**தா: க்ரியா விஷயை: ஸார்த⁴ம் பா⁴ஸயந்தீ சிதிர் - மதா ॥** 7

ரூபம் முதலானவைகளில் குணம், தோஷம் முதலான விகல்பங்கள் (வேற்றுமைகள்) புத்தியிலுள்ள வியாபாரங்களால் தோன்றுவதாகும். விஷயங்களை சேர்த்து அந்த வியாபாரங்களைப் பிரகாசப்படுத்துவது அறிவு எனப்படும்.

**ரூபாச்ச கு³ண - தோ³ஷாப்யாம் விவிக்தா கேவலா சிதி: ।**
**ஸைவாநுவர்ததே ரூப - ரஸாதீ³நாம் விகல்பநே ॥** 8

ரூபத்திலிருந்தும் குணதோஷங்களிலிருந்தும் தனித்து வேறுபட்டதாக இருப்பது சுத்தமான அறிவு. அதுவேதான் ரூபம், ரஸம் முதலானவை விஷயமாக விகல்பம் செய்யும் போது தொடர்ந்து இருந்துவருகிறது.

**க்ஷணே க்ஷணே(அ)யதா - பூ⁴தா தீ⁴ - விகல்பாச்சிதிர்-ந து ।**
**முக்தாஸு ஸூத்ரவத் புத்தி விகல்பேஷு சிதிஸ்ததா ॥** 9

புத்தியின் விகல்பங்கள் ஒவ்வொரு க்ஷணத்திலும் வெவ்வேறாக இருப் பவைகள். அறிவு மாத்திரம் அப்படியல்ல. முத்துக்களுக்குள் கயிறு (இருப்பது) போல புத்தியின் விகல்பங்களில் அறிவு (இருக்கிறது).

[முத்துமாலையில் முத்துக்கள் பலவாக இருந்த போதிலும் எல்லா முத்துக் களிலும் கோர்க்கப்பட்டுள்ள நூல் ஒன்று தான். இதுபோல புத்தியின் விகல்பங்கள் நிமிஷத்துக்கு நிமிஷம் வெவ்வேறாக வந்து கொண்டிருந்த போதிலும் எல்லா விகல்பங்களும் ஊடுருவியுள்ள அறிவு ஒன்று தான்].

**முக்தாபி⁴ - ராவ்ருதம் ஸூத்ரம் முக்தயோர் மத்⁴ய - ஈக்ஷ்யதே ।**
**ததா² வ்ருத்தி விகல்பை - ச்சித் ஸ்பஷ்டா மத்⁴யே விகல்பயோ: ॥** 10

கயிறு முத்துக்களினால் மறைக்கப்பட்டிருக்கிறது. ஆனால் ஒரு முத்துக்கும் அடுத்த முத்துக்கும் இடையில் காணப்படுகிறது. அப்படியே வெவ்வேறான புத்தி விருத்திகளினால் அறிவு (மறைக்கப்பட்டபோதிலும்) ஒரு விருத்திக்கும் அடுத்த விருத்திக்கும் இடையில் ஸ்பஷ்டமாகக் காணப்படும்.

**நஷ்டே பூர்வ விகல்பே து யாவத3ந்யஸ்ய நோத3ய: |**
**நிர்விகல்பக சைதந்யம் ஸ்பஷ்டம் தாவத்3 - விபா4ஸதே ||** 11

முந்தின விகல்பம் மறைந்து அடுத்த விகல்பம் உண்டாவற்கு முன் நடுவில் எவ்வித விகல்பமுமற்ற சுத்த சைதன்யம் தெளிவாக பிரகாசிக்கும். -

**ஏக - த்3வி - த்ரி - க்ஷணேஷ் - வேவம் விகல்பஸ்ய நிரோத4நம் |**
**க்ரமேணாப்4யஸ்யதாம் யத்நாத் ப்3ரஹ்மாநுப4வகாங்க்ஷிபி4: ||** 12

இவ்விதமாக பிரஹ்மத்தை அனுபவிக்க ஆசைப்படுகிறவர்கள் ஒரு க்ஷணம், இரண்டு க்ஷணம், மூன்று க்ஷணம் என்று கிரமமாக மிகப் பிரயத்தனத்துடன் விகல்பத்தைத் தடுத்தல் (நிறுத்தல்) அப்யஸிக்கப்பட வேண்டும்.

**ஸவிகல்பக - ஜீவோ(அ)யம் ப்3ரஹ்ம தந் - நிர்விகல்பகம் |**
**அஹம் ப்3ரஹ்மேதி வாக்யேந ஸோ(அ)யமர்தோ2(அ)பி4தீ4யதே ||** 13

இது விகல்பத்தோடு கூடின ஜீவன். அது விகல்பமே இல்லாத ப்ரஹ்மம். அந்த இவ்விஷயமானது நான் பிரஹ்மம் என்ற வாக்கியத்தினால் சொல்லப்படுகிறது.

[ஒரே பதார்த்தத்தை விகல்பத்துடன் (ஸாதாரணமாக புத்தி விருத்தியுடன்) ஸம்பந்தித்து வியவஹரிக்கும் போது பிரஹ்மம் என்றும் தனித்தனி பெயர்கள் ஏற்படுகின்றன. இதனால் குறிக்கப்படும் வஸ்துவினிடத்தில வேற்றுமை ஏற்பட்டு விடாது. ஒருவன் தன் தகப்பனாரால் புத்திரன் என்று வியவஹரிக்கப்பட்டும், அவன் குழந்தையால் பிதா என்று வியவஹரிக்கப்பட்டும் இருப்பதால் அவன் வெவ்வேறு மனிதனாக ஆகி விடமாட்டான். அவனுடைய ஸ்யவ ரூபம் இவ்விரண்டு வியவஹாரங்களினாலும் பாதிக்கப்படாமல் எப்பொழுதும் ஒரே ரீதியாகத்தான் இருந்து வருகிறது. அப்படியே ஜீவன் என்று அழைக்கப்படுவதும், பிரஹ்மம் என்று அழைக்கப்படுவதும் ஸ்வ ரூபத்தில் வேற்றுமையற்று சுத்த சைதன்ய ரூபமாகவே இருந்து வருகிறது. இந்தத் தத்வத்தைத் தான் உபநிஷத்துக்கள் "நான் பிரஹ்மம்" “அதுவே நீ" முதலான மஹாவாக்கியங்களினால் உபதேசிக்கின்றன.]

**ஸவிகல்பகசித்3-யோ(அ)ஹம் ப்3ரஹ்மைகம் நிர்விகல்பகம் |**
**ஸ்வதஸ்-ஸி3த்தா4 விகல்பாஸ்தே நிரோத்3த4வ்யா: ப்ரயத்நத: ||** 14

எந்த நான் விகல்பத்தோடு கூடிய சைதன்யமோ அந்த நானே ஒன்றாய் விகல்பமற்றதாயுள்ள பிரஹ்மம். தானாகவே ஏற்படுகிற அந்த விகல்பங்கள் பிரயத்தனத்தின் பேரில் தடுக்கப்பட வேண்டியவைகள்.

**சக்ய: ஸர்வ - நிரோதே$^{4}$ந ஸமாதி$^{4}$ர் - யோகி$^{3}$நாம் ப்ரிய: ।**
**தத$^{3}$ சக்தௌ க்ஷணம் ருத்$^{3}$த்$^{4}$வா ச்ரத்$^{3}$தா$^{4}$ளோர் - ப்$^{3}$ரஹ்மதா(ஆ)த்மந: ॥ 15**

எல்லா விகல்பங்களையும் நிரோதம் (தடை) செய்வதால் யோகிகளுக்குப் பிரியமான ஸமாதி நிலையானது ஸாதிக்கக்கூடியது. அதற்கு (எல்லா விகல்பங் களையும் முற்றிலும் தடுக்க) சக்தியில்லாத பக்ஷத்தில் ஒரு க்ஷணமாவது தடுத்து விட்டால், சிரத்தையுடன் பிரயத்தினம் செய்கிறவருடைய ஆத்மாவிற்கு பிரஹ்மமாயிருக்கும் தன்மை ஸித்திக்கும்.

[புத்தி விருத்தி ஏற்படாமல் முதலில் ஒரு க்ஷணமாவது இருக்கப் பிரயத்தினம் செய்தால் அந்த க்ஷணத்திலேயே ஆத்மாநந்தம் நன்கு ஸ்புரிக்கும் கிரமமாக அப்யாஸம் செய்து புத்தி நிச்சலமாயிருக்கும் காலத்தை வரவர நீடிக்கச்செய்யலாம்.]

**ச்ரத்$^{3}$தா$^{4}$ளுர் - ப்$^{3}$ரஹ்மதாம் ஸ்வஸ்ய சிந்தயேத்$^{3}$ - பு$^{3}$த்$^{3}$தி$^{4}$ வ்ருத்திபி: ।**
**வாக்ய - வ்ருத்த்யா யதா$^{2}$சக்தி ஜ்ஞாத்வா(அ)த்$^{3}$தா$^{4}$ப்$^{4}$யஸ்யதாம் ஸதா$^{3}$ ॥ 16**

சிரத்தையுடன் கூடியவர் தனது ப்ரஹ்ம நிலையை புத்தி விருத்திகளின் உதவியினாலும், மஹாவாக்கியங்களின் தாத்பர்யத்தை அனுஸரித்தும் ["வாக்ய விருத்தி" என்ற பிரகரணத்தில் கண்டவழியாக) சக்திக்குத் தகுந்தபடி சிந்திக்க வேண்டும். (சிந்தித்து ஸந்தேகமின்றி அறிந்துகொண்டு நன்றாக எப்பொழுதும் அப்யாஸம் செய்யவேண்டும்.)

**தச் - சிந்தனம் தத் - கத$^{2}$நம் அந்யோந்யம் தத் - ப்ரபோ$^{3}$த நம் ।**
**ஏத - தேக - பரத்வம் ச ப்$^{3}$ரஹ்மாப்$^{4}$யாஸம் விது$^{3}$ர் பு$^{3}$தா$^{4}$: ॥ 17**

அதையே நினைப்பது, அதையே சொல்வது, ஒருவருக்கொருவர் அதையே நன்கு அறிவிப்பது, அதொன்றிலேயே ஈடுபட்டிருப்பது ஆக இவையெல்லாம் பிரஹ்மவிஷயமான அப்யாஸம் என்று அறிவாளிகள் அறிந்திருக்கிறார்கள்.

**தே$^{3}$ஹாத்மதீவ$^{4}$த் ப்$^{3}$ரஹ்மாத்மதீ$^{4}$ - த்$^{3}$ராட்$^{4}$யே க்ருதக்ருத்யதா ।**
**யதா$^{3}$ ததா$^{3}$(அ)யம் மரியதாம் முக்தோ(அ)ஸௌ நாத்ர ஸம்சய: ॥ 18**

தேஹத்தில் "நான்" என்கிற எண்ணம் அஜ்ஞானிகளுக்கு எவ்வளவு திடமாயிருக்கிறதோ அதுபோல் பிரஹ்மம் "நான்" என்ற திடபுத்தி உண்டாகி விட்டால் ஸாதிக்க வேண்டியதெல்லாம் ஸாதித்தானதாகிவிடும். (இதன்பின்)

(இப்படிப்பட்டவர் எப்பொழுது வேண்டுமாயினும் மரணமடையட்டும் (மரண ஸம்பந்தமின்றி) இவர் (உயிர் வாழ்கையிலேயே) முக்தர். இதில் ஐயமே கிடையாது.